# முகவுரை

மீனாட்சியின் ‘குருவே சரணம்’ – நித்தம் தன் உள் மனதில் தோன்றியதை கொட்டிவிட்டார். தினம் தினம் காஞ்சி பெரியவர் மற்றும் காஞ்சி காமாட்சி அம்மன் நினைவலைகளின் உந்துதல்தான் இந்த படைப்பு.

மனஅலைகளின் பிரதிபலிப்பு அப்படி வார்த்தைகளாய் வர, தான் அறிந்த நல்ல தில்லி தமிழில் வடிவமைத்திருக்கிறார்.

ஒவ்வொரு பக்கத்திலும் பெரியவரின் படம் ஒன்று அமைய ரொம்பவும் மெனக்கெட்டார் என்றுதான் சொல்ல வேண்டும். படிப்பதற்கு அனுபவங்கள் அனைத்தும் இனிமையாகவே இருக்கிறது. படிப்பவர்களுக்கு இது ஒரு வரப்பிரசாதம்தான் !

**ரமேஷ் ராஜகோபாலன்**
மீனாட்சியின் கணவன்



# பொருளடக்கம்

28–7–2015

## என் உருவமதை உருவாக்கிய காமாட்சித் தாயே!

உன் கனிவான அருளினால் இன்று எனக்கு
உகந்த நாளை தந்தாய்த் தாயே!
என் சொல்வேன் என் அனுபவங்களை
குருவின் வழி நடத்தலால்
புகுந்தேன் உன் திருவடிகளை!
எத்தனை இன்பமயமான அனுபவங்கள்!
உடல் பிணி இருந்த போதும்
உனை நாடச் சொல்லி
வழி வகுத்த ஆசான் அந்த ஆசார்யர்!
மனத்தில் தெம்பும் திடமும்
தினமும் கொடுத்தாய்
சந்திர சேகரனின் பாதங்களின்
ஸ்பரிசத்தினாலே
வைபவங்கள் யாவும் இனிதே நடந்தேற
எண்ணங்களையும் ஒருங்கே அழைத்துச் செல்வாய்
என்றும் உன் அனுபவங்களை உணர
நினைவில் கொள்ள வரமருளுவாய் தாயே!
**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**

1–8–2015

## அபயம் அருள்வாய் அன்னையே !

எதிர்பார்க்கவில்லை
குருவாரத்தில் உன் அனுக்ரஹம்
கிடைக்குமென
ஈசனது பாதமலர் பட்ட
முல்லைப் பூவில் மனம் லயித்தேன்
என் பணிகளை துவங்க உன்
அருளாக நினைத்தேன்
உன் ஆசியினால், தாயின்
உபயத்தால், இனிதே துவங்கினேன்
என் லட்சிய பணியை
இது பலரைச் சென்றடைய வேண்டுமென
உன்னிடம் வேண்டுகிறேன்.
வல்லமை வேண்டி சிரம் தாழ்த்துகிறேன்
என் பணியை செவ்வெனே செயல்படுத்த
விரல் பிடித்துச் செல்வாள்
காமாட்சி அன்னை
சங்கடங்கள் யாவும் தகர்த்து அருள்வாள்
இயன்ற பயனை உலகிற்கு கொடுக்க
வழி அமைத்து அபயம் அருள்வாய்
குருவே சரணம் – ஆசார்யாள் பாதமே துணை!
**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**

10-8-2015

## நம்பிக்கையும் சிந்தனையும் !

குருவே உந்தன் பாதங்களைப் பற்றினேன் நம்பிக்கையுடன்
எனக்கும் கருணை புரிந்தாய்
என் நித்திரையின் மூலமாய்
எனது உணர்வுகளில் மாற்றங்களை
வர வழைத்தாய்
உன் பாதம் நினைக்கவே
சிந்தனையும் (சிந்தையும் மணியும் கூட்டினாய்)
இதைவிட வேறு பாக்கியம் என்ன வேண்டும் எனக்கு ?
உன்னை எப்பொழுதும் கைவிடாமல்
உந்தன் ஆசிகளையும் நம்பிக்கையும்
என் மூச்சாக மாற்ற வரம் தருவாய்
சந்திரசேகரா,
**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**

15-8-2015

# சத்குருவே சரணம்

மைல்கள் பல கடந்தாலும்
உங்கள் பாதங்கள் பட்டு மேனிதான்!
வியக்கும் வண்ணம்
என் சிரசில் வைத்தேன்
தங்களது பொற்பாதங்களை!
எனது அகந்தை, மமதை
ஆசை  அழியவே
என்னை நல்வழியே
கூட்டிச் செல்வாய்!
பணிகள் வகுத்திருந்தால்
தங்கள் பாதத்துணையே
என்னில் தெம்பையும்
நம்பிக்கையும் தரட்டும்
நல்ல சிந்தனையோடு
ஒரு மனதோடு ஒருமுகமாக
தங்களையும், அன்னையையும்
அருளாசியுடன் விவேகமும்
உத்வேகமும் பெற்று
என் பணியைப் பயனுள்ளதாக
ஆக்க ஆசீர்வதியுங்கள்.
**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**— ர. மீனாக்ஷி**

29–8–2015

## பாதக்கமலங்கள்

பூரண அவிட்டம் இன்று
உன் பட்டு பாதங்களையே
என் சிரசில் வைக்கிறேன்
என் எண்ணங்கள் யாவும்
உந்தன் விந்தையை நினைத்து
ஈர்க்கிறது உன்னருகில்
எனக்கு நீ அளிப்பதோ
ஒவ்வொரு நொடியும்
முன்னேற்றப் பாதையே!
நித்தமும் உன் அருள் வேண்டி
பாதம் சுற்றி வந்த போதும்
பாதயாத்திரை பல செய்தும்
உன் பொற்பாதங்கள்
பட்டாய் ஜொலிக்கிறதே!
இது போதாதா உன்
தெய்வீகத் தன்மையை உணர
என்னை ஆட்கொள்வாய்
நல்லதோர் வழியைக் காட்டுவாய்
எப்பொழுதும் உன் பாதங்கள் என் சிரசினிலே!
இருக்க அருள்வாய் –
**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**

24–9–2015

## காமாட்சித்தாயே காத்தருள்வாய் !

உன் பாதங்களை என் சிரசில்
வைத்த மாத்திரத்தில்
மாற்றங்கள் பல என்னுள் உண்டாக்கினாய்
காலங்கள் பல உனைக் காணாமலே
கடத்தி விட்டேன்!
உன் அருகாமையை உணர பல
உத்திகளை தருவித்தாய்!
சம்பவங்கள் பல மயிர்க்கூச்செடுக்கின்றன
ஆனால் பாவி மனதோ
அவ்வப் பொழுது சொல்கிறது.
காணவில்லையே உன் தவக்கோலத்தை
புவியில் தாங்கள் உடன் இருந்தபொழுது
எனக்கும் வருமோ உம்மை இன்றும்
அருகாமையில் தரிசிக்க, நேசிக்க
நல்வழியில் இன்னும் சிந்தனைகளை
உணர வைக்க வேண்டுகிறேன்.
ஏற்றிச்செல்ல என் கையை தங்கள் தவக்கரத்தோடு இணைத்து,
என்னையும் வழி நடத்திச் செல்வாய்,
அன்பு காமாட்சியின் கடைக்கண்
ஆசியினால் இனிதே எல்லாம் நடக்கட்டும்!
காமாட்சித்தாயே காத்தருள்வாய்!
**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**

2-10-2015

# அபயஹஸ்தம்

நீ என்றும் என்னுடன் துணையிருப்பாய்
ஒவ்வொரு நொடியிலும் உணருகிறேன்!
நினைத்த மாத்திரத்தில் கிடைக்கிறதே பலனும்
இன்றும் உன்னால் முடியும் என்று
தன்னம்பிக்கை தருகிறாய் காமாட்சித்தாயே!

அன்று காதருகில் இயற்கையாய் தூக்கம் வந்து விட்டதே
என்று கூறியது இன்றும் என்
நினைவிலிருந்து அகலவில்லை!
காமாட்சி பார்த்துக் கொள்வாள்
நீ எதற்கும் கவலைப் படாதே என்று கூறுகிறாய்.
சங்கரா : உன் அபயகரங்கள்தான்
என்னுள் பல உணர்வுகளை
வலுவடையச் செய்கிறது,
நம்பிக்கை ஊட்டுகிறது.
திருவடியே என் சிரசில்
மிதமாக வைத்து
எனக்கு நல்புத்தியைத் தருவாய்
அபயஹஸ்தம் என்றும் என்னுடன் இருக்கும்
**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**

27–12–2015

## அன்னையாய்! அவதாரபுருஷனாய்!

அன்னையாய் அவதார புருஷனாய்
சிரசில் குஞ்சிதபாதம் ஏந்தி
எனக்கும் பல இடர்கள் வந்த பொழுது
உனது திருவடிகளைத் தந்து
துன்பங்கள் அனைத்தையும் பஞ்சாய்
மாற்றினாய் என்னால் சுமக்குமளவுக்கு!
ஓடிய நாட்களை நினைத்துப் பார்த்தால்
உன் அருளே என் கடிவாளம் என உணர்ந்தேன்
புவியில் என்னால் ஏதேனும் செய்ய முடியுமென்றால்
உன் திருவடி என் சிரசில் வைத்து
என் கைகளை ஏந்தி இழுத்துச் செல்வாய்
பணிகளை பளிங்கே செய்திட!
வெள்ளம் வந்தபோதும் அனுபவங்கள் பல கொடுத்தாய்!
உன் அருகாமையில் உன் ஆசியை
நான் பெறாமல் போனாலும்
இப்பொழுது எனக்கு மட்டும் உணர
வைக்கிறாயே பேதை எனக்கு!
இனிதே இன்று உன்னை நினைத்திட
தாயையும் துதித்திட
வரமளித்த சங்கரா!

உன் திருவடிகள் எப்பொழுதும்
என் சிரசினில் அமரட்டும்
அது மட்டும் அதற்கு உகந்தது என்றால்!
உன் பாதார விந்தங்களுக்கு
என் உளமார வந்தனங்கள்.
**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**

2–1–2016

## தங்களுடன் சம்பாஷனை

அற்புதங்கள் பல நிகழ்த்தினாய் சென்ற வருட முழுவதும்
அவையெல்லாம் என்னைப் பண்படுத்தவே என்று
அமைதியாக சிந்தித்த பொழுது உணர்ந்தேன்அங்கங்கள் அனைத்தும்
உறுத்திக்கொண்டிருந்தாலும்
அவையனைத்தும் உன் கருணையாய் சகிப்புக்குள்ளாகியதே!
அன்றாடம் உன் திருவடியை உறுதியாக பற்றிக்கொள்ள
அருமையான தருணங்களை கொடுத்தாயே!
அனைத்தும் அன்னையால் முடியும்
ஆச்சார்யாள் பாதங்களால்
காமாட்சியின் பாதங்களால்
காமாட்சியின் கடாட்சமும் கிட்டியதே
அன்னை என்னை இழுத்துச் செல்வாள்
அவள் இட்ட பணியை செய்திடவே!
அன்றாடம் எனக்கு உயிர்ப்பிச்சை அளித்தவள்
என்றும் உன் மூலமாக
எனக்குத் துணைபுரிவாள்
இன்றும் இந்த வருடம் துவக்கத்திலேயே
அருளாசியும் நிறைய வழங்கியுள்ளாள்
எல்லோருக்கும் ஏதேனும் ஒரு வகையில் என்னால் உதவ அவள்
அபயகரத்தை பிடித்துக் கொண்டு
சங்கரா உங்களுடன் ஏகாந்தமாய்
சம்பாஷணை புரிவதற்கும்
எனக்கு வல்லமையை தந்திடுவாய்
உன் அருளை உணரவே
எனக்கு துணை புரிவாய்.
உன் பாதம் என் சிரசில்!

**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**

30–3–2016

## மர்ம வைத்தியர்

எனக்கு மட்டுமே உணர முடியும்
உன்னை ஒரு வைத்தியராக!
இன்றும் நான் நற்சிந்தனையுடன்
தாம் இட்ட காரியங்களை
திறம்பட செய்வதென்பது
ஏங்குகிறேன் நானும்
உரக்க உரைத்திடவே
உன் பூர்ணாசியுடன்தான்!
ஏங்குகிறேன் நானும்
உரக்க உரைத்திடவே
உன்னைப் பற்றி.
என் அனுபவங்களில் தங்கள்
கருணை, கடாக்ஷம், ஆசி
இவைகளை அனுபவித்தவைகளை
எந்தச் செயலும் நான்
முடிவெடுக்க வில்லை!
தாங்கள் தான் தருவித்துக் கொடுக்கிறீர்கள்
அதையும் சலனமின்றி
எக்கேள்விகளுமின்றி
ஏற்றுக்கொள்ள
மனப்பக்குவத்தைத் தரும் சுவாமி!
தான் எனக்காக வகுத்த பாதையை
நன்கு ரசித்து மகிழ்ந்து கடந்து செல்ல
அன்னையின் அருளாலே
உன்னால் தான் தரமுடியும்!
சுயலாபம் என்றாலும்
அங்கொன்றும் இங்கொன்றுமாய்
நற்கார்யங்கள் செய்ய
வழி வகுப்பாய் தாயே
**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**

23-4-2016

# உந்துதல் உன்னால் உயிர்பெற்றதும்

உந்துதல் உன்னால் உயிர்பெற்றதும்
நிச்சயம் என் நிலை உயர்த்துவாய்
என என் உள் மனதினிலே
உன் விரலால் எனைபிடித்துச்சென்றாய்!

அடைந்திடும் இடம் நான் யோசித்திருந்தாலும்
உன் புகலிடமும் அதுவேதான் என உணர என்னால் முடியவில்லையே?!
உன் விரல் நுணியினை ஏந்தி
உயரத்துடித்தேன், உள்ளார்வம்
பொங்கும் வகையில் நான்
சாதிக்க நினைத்தவற்றை நீ நிச்சயம்
செய்து காண்பிப்பாய் !

உன் புகழை கூவி கூச்சலிட நானும்
பல கணங்களாய் காத்திருக்கிறேன்
உயர உயர ஆசைதான் அழியாதென தெரிகிறது.
ஆனால் சாதிக்க வேண்டுமென கனாவும் இருக்கிறது.
உன் பதமதின் கண்ணோட்டத்தில்
என்றும் மனதில் நிற்பாய்
உள்ளம் பொங்கும் அன்பாய்
உன்னிடம் தஞ்சம் அடைய
நல்புத்தியை நல்குவாய்
குருவாய் வருவாய்
**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**

30–4–2016

## எந்தநேரமும் ஏங்கும் மனது !

எதற்கு என்பதுதான் விளங்கவில்லை!
ஊர்ஜிதமாய் உன் அருளை
தருணங்கள் பலவற்றில் உணர்ந்திருக்கிறேன்.
உன் திருவருளை பரிபூரணமாக உணர
உன்னுடன் நானும் சம்பாஷணை புரிகிறேன்.
என்று பெருமிதமாய் எடுத்துரைக்க
ஒரு சந்தர்ப்பவாதியாய் நான் ஆகிவிட்டாலும்
கிட்டாமல் விடாது உனதருள் !
என் உளம் அவ்வப்பொழுது சோர்ந்தாலும்
உன் திருவிளையாடல்கள் படித்தால்
நம்பிக்கை பிறந்திடுதே மனதில்!
உற்சாகமும் கொடுத்து விடுகிறாய்
எல்லாம் செவ்வனே செய்து முடித்திட
திட்டங்கள் என்னவோ ?
தெரியவில்லை ஆனால் ஒன்று, நீ என்னை
அன்னை கரம் கொண்டு எங்கோ
இழுத்துச் செல்கிறாய் என்று மட்டும்!!
ஏங்குகிறது எங்கே என்று ?
அர்த்தம்தான் என்னே!
**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**

22–6–2016

## அனுக்ரஹம் பாலிக்கும் கருணை உள்ளம்!

அனுஷ நட்சத்திரத்தில் அவதரித்த அனுக்ரஹ புருஷர்!
அனைத்து எண்ணங்களையும்
அழகாக உள்ளுணர்ந்து
அவனிதனில் கவலையற்று இருக்கவும்
அவ்வப்பொழுது கருணையும்
அபிமானமான ஆசிகளையும் தந்து
அளப்பறியா சந்தேகங்களுக்கு
அனுபவங்கள் பல கொடுத்து
அன்றாடம் வாழ்வதற்கு
அச்சாணியாய் நம்பிக்கை தந்து
அலைபாயும் மனதிற்கு
ஆறுதலுடன் பக்குவம் தந்து
அடுத்து என்னவென்று
அறிய துடிக்கும் பொழுது
அன்புடன் நான் இருக்கிறேன்
அனைத்திற்கும் பதில் கிடைக்கும்
அஞ்சாதே எதற்கும்
அழைத்துச் செல்வேன் சரியான பாதையில் என
அம்பிகையின் விரலைப் பிடிக்கச் சொல்லி
அசையாத நம்பிக்கை அலைகளை
மனதில் எழச்செய்து
அவசியம் அருளுவேன் உனக்கு என
அபயம் தந்து
அபரிமிதமாய் புன்முறுவல் பூக்கும்
அந்த அழகை காண வேண்டும் மீண்டும்!!
**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**

21–4–2018

## குருவே உந்தன் சகாயமே போற்றி!

குருநாதா உன் அனுக்கிரஹம்
இன்றும் கிடைத்தது உன் தயவாலே
என் பலன் ஏதோ உனைத் தொழுதிடவே
என்னை உன் பதமதைத் தொட பரிந்தாயே!

உன் விரல் என்னை என்றும்
கூட்டிச் செல்கிறது!
அடையும் இடம், நிச்சயம்
உன் அருள்மழையை உலகம்
அறிய நினையச் செய்யும்.

உடன் வரும் வேகம் சில நாள்
தளர்ந்தாலும், உன் மனதில்
உன் கருணை என்றும் எனை
சிறு பிள்ளைபோல் உடன்
வரச் செய்கிறது.
மனம் சொல்கிறது, கண்டிப்பாக
உயர் இடத்தில் என்னைவைப்பாய் என்று
அது உந்தன் பதம் ஆனாலும்
உந்தன் கருணையின் சிகரமானாலும் சரி
உன் பின்னே நான் ஒரு கண்மூடிதான்!
**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**

27–6–2018

## பெரியவா என்றும் என்னுடன்

தருணங்கள் பல உன் உறைவிடம்
அனுபவித்தேன்
தடம் மாறினாலும் ஆழ்மனதில்
உன் நினைப்பால் சமன் ஆனேன்!
எது என்னால் – ஒன்றுமே இல்லை
என எண்ணும் பொழுது
மனக்கவலை யாவும் உடன் இறக்கினேன்!
ஒவ்வொரு தருணமும் உன் பதம்
நினைத்த மட்டில் நீ இருப்பதை உணர்ந்தேன்!
தருணங்கள் அமையவில்லை, நேரில் காண,
ஆசைகள் உண்டு உன் நாமம் சொல்ல,
அமைத்திடுவாய் அவ்வேளையை !
உன் அனுக்கிரகங்களை வெளிக் கொணர
பல காத தூரம் கால்வழியே நடந்து
புனிதமாக்கினாய் சென்ற
இடங்களை மட்டுமல்ல
கணமது உன்பதங்களையும் நினைக்கும்
என் மனதினையும்தான் !
எது நிரந்தரம் – உணர்த்திக் கொண்டிருக்கிறாய்
வழி நடத்திடுவாய், மனதை செம்மனிட்டு
எல்லோருக்கும் உதவிபுரிந்திட
அருளிடுவாய் பாதாரவிந்தனே! சரணம்!

**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**

27–7–2018

## நின் புகழ் பாட !

மனதில் எக்கணமும் சஞ்சலமே
மனதார நின் பதம்தனை, எல்லாம்
மறந்து நினைத்தாலே, குதூகலமே!

மனதிற்குள் எண்ணங்கள் எண்ணிய பொழுது
மனதார நின்பதம்தனை எண்ணிடுமே!
மனம் சொல்வதை நின் அருள் என்று எண்ணி
மனதிற்குள் நின் புகழை எடுத்துரைக்க தூண்டிடுமே!
மக்களுடன் உனதருள் பல நாள் பெற்றதை
மகிழ்ச்சியுடன் பாங்காக உரை நடத்த
மகான் அவரின் பாதம் தனை பணிந்திடுமே!
மலரும் உந்தன் அருளுரைகளை
மதுரமாக மகிழ்ந்துரைக்க
பூரண ஆசிகளுடன்
எனக்கு புனர் ஜென்ம அனுபவங்களை
கொடுத்த, என்று உந்தன் பாதங்களை
பற்றிடுவேன் ?
பகிர்ந்திடச் செய்வாய், மகான்
உன் ஆசியினால், உன் தெய்வ தத்துவங்களை, மகிமைகளை
மனித நேயம் தழைத்தோங்க
குருவாக ஆசிகள் அருள்வாய்!
**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**

3–8–2018

## அபயகரங்கள் மட்டுமா?
## நின்தாள்கள் சேர்த்தும்தான்

ஒவ்வொரு நாளும், சீராக அமைந்திட
ஒரு போதும் மறவாது, நின் பதங்களை நினைத்திட
ஒருங்கே முடிந்திடுமே, எண்ணிய எண்ணங்கள் யாவும்
ஒரு வேளையேனும், உந்தன் பதங்களை சிரசில் தாங்கிட !

அனுபவங்கள் யாவும், அசைபோடவைக்கும்
அன்புடன் உந்தன் அருள் கரங்களை வணங்கிடச்செய்ய
அதனால்தான் என்னவோ, நினைத்த நொடியினிலே
அகம் சொல்லும் கவலைகளை, பளிச்சென்று துடைத்திடுவாய்,

என்றும் உந்தன் பதங்களை வியந்த வண்ணம் வணங்கிடவே
எதற்கும் உட்பொருள் உண்டு என பல கணம் விளக்கிடவே
எதனால் என்று சிந்தித்தால் புரியும், எதுவும் என்னால் அல்லவே
எல்லாம் உன் அருளாலே, என்றும் ஏற்றங்கள் கண்டிடவே !

பாதார விந்தம், பற்றினால் பரவசமே
பதறாதிருத்தல், பற்றினால் பதங்கள் தருவதே
பல அனுபவங்கள் புதிராக இருந்தாலும்
பலகாலம் கூட்டிச்செல்வாய் பதங்கள் உடன் சேர்த்தே.

மனம் பண்பட, சிந்தனை மேம்பட, நின் பத்ம பாதம்
மானசீகமாக மனமுருக நினைத்தாலே
மகிழ்ச்சி மட்டுமே மிஞ்சிடுமே
மனதில் உற்சாகம் பொங்கிட

நினைக்கத் தோணிடுமே
நீயே என்றும் எனக்குத் துணை
நீ விரல் கொடுத்து புகழ் சேர்த்துக் கொண்டிருக்கிறாய்!
நின் பாதமே சரணம்,
**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**

22–8–2018

## வண்ணங்கள் புரிய வர்ணங்கள்!

ஒவ்வொரு வண்ணக்கலவையும்
உன் அருளாலே மனமகிழ்ந்து
உன் திருவடிக்கு சமர்ப்பிக்கிறேன்!

எங்கே எதை என்று
ஏங்கிக் கொண்டு மனம்
ஒடுங்குகையிலே, ஒவ்வொரு
நாளும் உன் அரவணைப்பு
நன்கு தெரிகிறது!

நம்பிக்கை உன் விரல் பிடித்து
இன்றும் சென்று கொண்டிருக்கிறேன்
அமரும் இடம் இதுதான் என்று
நீ காட்டினால் அதுவும் எனக்கு
வண்ணமயமானதே!

மனம் குதூகலம் அடைய
உனக்கு வண்ணங்கள் தீட்டுவதால்
குழந்தை உள்ளம் போல் நினைப்பு
எனக்கு! இருந்து விட்டுப் போகட்டுமே!

நித்தம் இந்த சின்ன வண்ணப் படைப்பிலே
உன் அருளை நினைத்து
உளம் குளிர்வதும்
உன் தயவாலே!

ஏதோ மிகச் சொற்ப விஷயம்
என்றாலும், மனதில் நிறைவு
வானமே எல்லை என்று சொல்கிறது.
உந்தன் திருவடி பற்றி என்றும் உயர்ந்திட
**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**

25–8–2018

# நம்பிக்கை கை கொடுக்கும்!

சங்கரனின் பதமதை நினைக்கையிலே
தெம்பு வந்திடும் மனதினிலே!
சோர்வு மனதளவில் உண்டெனும்
உன்மேல் உள்ள நம்பிக்கை இறுக்கம் தளர்த்துமே!

இரவொன்று நிச்சயம் சுகமாய்
நீ அமைத்திடுவாய்!
இதை பல தினங்களாய்
என்னுள் பதித்திட்டாய்!

இன்னல்கள் எதுவானாலும்
உன் பதங்கள் கொடுக்குமே
பொறுக்கும் பொறுமையை!
இனிதே கழித்திட
பொழுதும் சாய
உறக்கம் நல் உள்ளம் தனில்
மெல்ல ஓங்கிட
உன் பதங்களை உளமுருக
உடனே நினைக்கத் தூண்டும்

உந்தன் இரட்சை என்றும்
என்னுடன் இருந்திட
வேண்டும் நானுமோ கலங்கிட
உன் வழியில் நான் செல்ல
மனதை திடப் படுத்திக் கொண்டேன்
இன்னும் உன் அருளை அனுபவிக்க
உன் பாதமே சரணம்!
**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**

5-9-2018

## ஸ்ரீ குருப்யோ நம:

உனது கருணை என்றும் நான் உணர்ந்திட
உனது திருஉருவம் என்றும் நான் நினைத்திட
உனது சொற்கள் என்றும் நான் உரைத்திட
உனது கடாட்சம் என்றும் நான் பெற்றிட

தருவாய் குருவே ஒரு க்ஷணமேனும்
தருவாய் குருவே மனதில் நம்பிக்கை
தருவாய் குருவே உயிர்உள்ள வரை சாதிக்க
தருவாய் குருவே உடலில் தெம்பை

தருணங்கள் பல உன் தயவால்
நானும் ஆசை கொண்டேன்
உனது கடாட்சம் வெளிக்காட்ட
முயற்சிகள் எடுப்பதும் துறப்பதும்

இதுவே உனது பொறுப்பான கைங்கர்யமோ ?
என சிந்திக்க தோணுகையில்
உனதுருவம் தருமே எனதுள்
தன்னம்பிக்கையை, மனதை சீர்படுத்த

ஒருங்கே செல்ல, நல்லதே நினைத்திட
உதவிகள் பல புரிய, எவ்வழி என்றும்
உணர்த்திட தினமும் எதிர்கொண்டு
காத்திருக்கிறேன், உன் துணையோடு

இந்த படைப்பினை ரசிக்க
பின் உந்தன் தயையால் பயமதை
நீக்கி, அடுத்தது என்ன என்று
நீ உணர்த்திட, என்றும் தேவை

உன் பொற்பதங்கள் என்சிரசிலே
அருள்புரிவாய் குருவே!
ராம ராம ஹரே ஹரே
சங்கர சங்கர சாம்பசிவா!
**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**

4–3–2019

## சிவ குருநாதா சங்கர நாதா!

பார்த்த பொழுதினிலே உனது அருள்
என் மனதினிலே ஏற்றிடுமே பொருள்!
பரவசமாகும் உன் கருணை பார்வையாலே
எனது உணர்வும் ஒரு துள்ளளாலே!

மனது உணர்த்திடும் கண்டிப்பாய்
கூட்டிச் செல்வாய்
பாதை வகுத்த உன் கடாட்சத்தினாலே
என்றும் கண்டது ஏற்றமே!
ஒவ்வொரு கணமும் உச்சமே!

துவண்ட மனதினில் பொங்க
வைப்பாய் அருள் நம்பிக்கையை
கண்டிருக்கிறேன் நிச்சயம்
பொய்யாகதென
தகர்த்திடுவாய் எந்த தீயவினையாவையும்!

இன்னும் காண வேண்டும்
மனமது பக்குவந்தனை
அதற்கும் அளித்திடுவாய்
தவறாது தருணங்களை!

பொருள் விளங்காவிடிலும்
தீட்டிய திட்டங்களை
நிறைவேற்றிடுவாய்
எல்லோர் ஆவலைப் போலவே!

அருளாசி தந்திடு நன்செயல் புரிய
நற்சொல் கூற நல்லெண்ணங்கள்
ஓங்க உன்பதமருளை நல்குவாய்!
**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**

9–4–2019

## உற்சாகம், தன்னம்பிக்கை எல்லாம் உன் அருளாலே!

எப்பொழுதும் தந்திடுவாய் வடிகால் அதனை
கண்டிப்பாக உன் அருள் என்மீது உண்டு
என தரும் தருணங்கள் பல!
என் சொல்வேன் உனை நேரில் காண இயலவில்லையென
நினைக்கையிலே, உணர்த்திடுவாய்
இத்தருணமே உன்னுடன் இருக்கிறேன் என்று
ஒரே ஒரு பொழுது உன்னைக் கண்டிருக்கிறேன்.
ஒரு சிறுமியாய், உன் பாதயாத்திரையில்
தலை நகராம் தில்லியில் என் தகப்பனாருடன்
சாலையோரம் நின்றிருந்தேன் ஒன்றும் அறியாமல்
ஆனால் அக்காட்சியோ மனதிலிருந்து
அகலவில்லை இன்றும்,
வருந்தும் மனதும் பல தருணங்களில்
உன்னை நேரில் காண வில்லையே என,
இருந்தாலும் உன் மலர் முகத்துடன்
அபயகரம் காட்டி அதனாலென்ன
இருக்கிறேன் உன்னுடன் எத்தருணமும்
உன்னால் முடிந்ததை செய் என உணர்த்திடுவாய்
மனம் சோர்ந்தாலும் என்றும் உன் நினைப்பை உணர்த்திடுவாய்
விரல் ஒன்று எப்பொழுதும் காட்டிடுவாய்
உற்சாகத்தோடு பற்றிடவே
விடியலின் வாசல் வரை அழைத்துச் செல்வாய்
எல்லாம் உன் செயல் என அவ்வப்பொழுது
நினைத்திட அருள்புரிவாய்
என்றும் என் சிந்தையில் குடி இருந்து!
**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**

19-04-2019

# சித்ரா பௌர்ணமி

முழு நிலவு அதன் மகிமை
உன் அருள் மகிமை!
உணர்வுகள் பல வருகின்ற பொழுதினிலே
உணர்த்திடுவாய் நிலையா உன் அருளை!

எவ்வாறு முடிவு பெறுகிறது
ஒவ்வொரு தருணமும்
உன்னை நினைத்தமாத்திரத்தில்
கண்டிப்பாக நடத்துகிறாய்
மனம் விரும்பியது போலவே!

வலி எதுவானாலும்
உன் வலிமையால்
இல்லாது செய்திடுகிறாய்
இன்றும் உற்சாகமாய்
பல செயல்களை செய்ய வேண்டுமென
அருள் பாலிக்கிறாய்!

உன் அருளாலே
உடன் இருக்க வேண்டுகிறேன்
உங்களது ஆசிகளை ஏற்றுமே
ஆசிகள் உங்களது மட்டுமே
போக்கிடுமே பல துயரங்களை !

அனுபவத்தினால் பல தருணங்களில்
அடைந்திருக்கிறேன் மன வருத்தமும்
விட்டுவிட்டேன் உங்களுடைய
அரிய தரிசனத்தை காண
தாங்கள் பாதத் தூளிகளை பதித்த
அந்த நாட்களில்

இருந்தாலும் ஒரே ஒரு முறை
தங்களை கண்டும் இருக்கிறேன்
சாலை ஓரத்தில்
சற்றே தூரத்தில்
சிறுமியாக எதையும்
உணர்ந்திராத நிலையில்
ஆனால் என் மனம்
என்றும் சொல்கிறது.
அன்றே உங்கள் அருள்
கடாட்சம் எங்கோ
எனக்கு அளித்தீர்கள் என்று!
இன்றும் நம்பிக்கையுடன்
காத்திருக்கிறேன் அன்பே
சிவமென உணர்த்தும் உங்கள்
நல்லாசிகள் பல என் வாழ்வில்!

பூரண நிலவாம் இன்று
உன் கருணையும் நிலவும்
பூரணமாய் இன்று
ஆணி வேராய் நிலைத்திட
உன் உருவம் என்றும்
என் ஆழ்ந்த மனதில்
பாதங்கள் கமலமாய்
கண்களில் பதித்திட
தருணங்கள் பல
அளித்திடுவாய்
முழு நிலவாய்
இன்றும் என்றும்!
**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**

02–05–2019

## திரும்பிப் பார்க்கிறேன், உணர வைக்கிறது!

உன்னாற்றல்கள் பல புரிந்தன,
என் பாதைகள் பல கடப்பதில்
இன்னும் ஏன், எப்படி என்பதில்
ஒரு ஐயம் நிச்சயம் இருக்கிறது.

வெள்ளம் புரண்டோடிய பொழுதும்
அழியவில்லை உன் திருநாமங்கள்
மிதந்து வந்தன உன் கடாட்சம்
என் மனை அருகில், உணர்த்திட
உன் உறுதியான வாக்குகளை!

எழுத்துக்கள் யாவும் பதிந்து விட்டன
அழியா செல்வமென புரிந்து கொண்டேன்
கையில் கிடைத்த மாத்திரத்தில்
மனதில் எழுந்த கவலை அழிந்ததே தவிர
உன் புகழ் எழுத்துக்கள் அல்ல

மெல்ல மெல்ல ஓங்கி ஒளிரச்செய்வாய்
வாழ்க்கையின் அர்த்தமதை
புரியும் வகையில் காட்சிகள்
அமையச் செய்வாய்!

இன்னும் பணி செய்ய என்ன இருக்கிறது?
நிலையான நிறைவான உணர்வுதனை
புரியச் செய்தாய்
வேறென்ன வேண்டும்?
எதை நான் கேட்பின்
உனையே தந்திடுகிறாய்!
**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**

2–5–2019

## உனையே மனதினில் ஏற்பேனே!

நாள் முழுதும் இடை இடையே
உன் திருஉருவமதை நினைத்திடத் தோணுகிறதே!
சற்றே உற்றுப் பார்க்கையில்
சரளமாக பணிகள் புரிய
சங்கடமின்றி சாதித்தருள்கிறாய்!

பல தருணங்களில், இன்றுமே கேட்கத் தோன்றுகிறது
எதுதான் நிஜம்? உண்மையும்
பொய்யாகத் தெரிகிறதே
உண்மையை உணரும் வகையில்
மனமும் ஒரு கணம் சிந்திக்கிறதே
உன் வாக்கியங்களே சத்தியமென!

மனமோ ஒரு குரங்குதான்
இன்னும் ஏன் இறுக்கங்கள்
புரியவில்லை சங்கரா!
பிறவி அனுபவிக்க சரி
எவ்வாறு அதை புரிந்து கொள்ள!

உன் திருஉருவம் மனதில் தோன்றினாலே
க்ஷணமது சிந்திக்க துவங்கும்
இந்த பொய்யான தோற்றம் எதற்கென?

வாழ்க்கை வாழ்வதற்கே!
புரிகிறது ஆடல் அவன் செயல்!
ஆட்டம் கொண்டாட்டம் அவன் செயல்!
**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**

16–6–2019

# ப்ரணவஸ்வரூபா !

ப்ரணவஸ்வரூபா
ஓம் நமசிவாய !
மனதில் பதிந்தது
உருவ வடிவாக

சந்திர சேகரா
ஆனந்த ரூபா!
மனதில் நிறுத்தினாய்
மெய்யான அழகை !
சங்கர குரவே
வலுவாக உணர்த்திட !
எது ஆத்மார்த்தமென்று
எண்ணியே வியந்திடச் செய்தாய் !

காற்று உன் சுவாசம்
அது உன் வசம்
அறிந்தே இயக்கச் செய்தாய்
ஆற்றலை உணர்ந்திட்டே!

**"ஹர ஹர சங்கர**
**ஜய ஜய சங்கர"**

**– ர. மீனாக்ஷி**



With Best Compliments from

**R. Meenakshi,** Director R&D

**Vels Group of Schools**

during the book release ( Tips & Toes - 1 ) on 02.08.19